முன்பக்கத்தொடர்:-

பிரிட்டனின் யுத்தக் கொள்கையும், அது அமெரிக்காவுடன் கொண்டுள்ள ஏகாதிபத்திய இளைய பங்காளி உறவுமே அதன் பொருளாதார சீர்குலைவுக்கு காரணம் என்பது தெளிவாகப் புலப்படும். பிரிட்டனின் டாலர் சேமிப்பு குறைந்து விட்டதெனின், அது இனிமேல் காமன்வெல்த் நாடுகளின் பாங்கியாக இருக்க முடியாது என்பதே. அதாவது பிரிட்டிஷ் சாம்ராஜ்ய பொருளாதார அமைப்பு தகர்ந்துவிடும் என்பதே. ~~அதனால்~~ அதனுள் நிலைமை 'மிகவும் நெருக்கடி' என பிரிட்டிஷ் நிதி மந்திரி பட்லர் கூறுகிறார். இதன் காரணமாகத் தான் சென்ற மாதத்தில் லண்டனில் அவசர கோலமாக காமன்வெல்த் நாடுகளின் நிதி மந்திரிகள் மகாநாடு கூடியது.

பண வீக்கத்தை எதிர்த்து நடவடிக்கை எடுப்பது, ஏற்றுமதியை மேலும் அதிகமாக்குவது, இறக்குமதியை குறைப்பது ஆகியவைகளே உடனடி நடவடிக்கைகளாகவும், காமன்வெல்த்திற்கு வெளியே இருந்து மூலதனம் வருவதை அனுமதிப்பதென்பதை நீண்டகால திட்டமாகவும் கொள்ளுவதென காமன்வெல்த் முடிவு செய்துள்ளது. தொழிலாளர்கள், மத்தியதர வர்க்க மக்களின் சம்பள உயர்வு, வாழ்க்கை வசதிகளை மறுத்து, அவர்களுடைய போராட்டங்களை நசுக்குவது, வியாபாரிகள் கடைக்காரர்கள், சிறு தொழிலதிபர்கள் இவர்களின் மீது வரிச்சுமையை அதிகமாக்குவது என்பதே இதன் அர்த்தம்.

இரண்டாவது, இறக்குமதியை குறைப்பது என்ற பெயரால் மக்களுக்கு தேவையான பொருள்கள் இறக்குமதியை குறைத்து மக்களை மேலும் கசக்கிப்பிழிய வழிசெய்வது என்பதேயாகும். ஏற்றுமதியை அதிகரிப்பது என்ற பெயரால் உள்நாட்டின் சாமான்களை, சொந்த மக்கள் கொள்ளையடிக்கப்படவும், அயல் நாடுகளிலும் கொள்ளையடிக்கவும் வழி செய்யப்படுகிறது. ஜனவரி 29-ம் தேதி பிரிட்டிஷ் நிதி மந்திரி பிரகடனம் செய்துள்ள நடவடிக்கைகள் இதை நிதர்சனமாக்குகின்றன. 6 மாதத்தில் 10 சதமானம் சர்க்கார் ஊழியர்கள் நிறுத்தப்படுவார்கள் எனவும், புகையிலை, நிலக்கரி, உணவு, பழவகைகள், துணிமணி, ஆகியவைகளின் இறக்குமதியைக் குறைத்து 50 கோடி பவுன் மிச்சம் பிடிக்கப் போவதாக அவர் அறிவித்துள்ளார்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் யுத்த செலவுகளை மக்கள் மீது திணிப்பது என்பதைத் தவிர இதற்கு வேறு ஒன்றும் அர்த்தம் அல்ல. காமன்வெல்த் நாடுகளின் "சம்பாதிக்கும் சக்தி" பெருக அமெரிக்க மூலதனம் இந்த நாடுகளில் குவியவேண்டும் எனவும் முடிவு செய்யப்பட்டுள்ளது. அதற்கான ஊக்கம் அளிக்கப்பட வேண்டும் எனவும் அம்முடிவு கூறுகிறது. இந்தியா, பாக்கிஸ்தான் போன்ற நாடுகளில் அமெரிக்கா தனது பொருளாதார ஆதிக்கத்தை ஸ்தாபிக்க வழி வகுப்பது என்பதே அந்த முடிவின் அர்த்தம். நீர்ப்பாசன அணைக்கட்டுகள் கட்டுவது, மூலப்பொருள் உற்பத்தியை அதிகமாக்குவது என்பதிலேயே இந்த மூலதனம் பயன்படுத்தப்படும் எனவும் நிதி மந்திரிகள் முடிவு செய்துள்ளனர்.

அதாவது காமன்வெல்த் நாடுகளின் காலனி பொருளாதாரத்தை அப்படியே பாதுகாப்பது; பொருளாதார சுதந்திரத்திற்கு அடிப்படையான கனரக தொழில்களை கட்டுவதில்லை என்பதே அந்த முடிவின் சாராம்சம். இந்த முடிவுகளை அனுசரித்து பாக்கிஸ்தான் 6 கோடி டாலர் கடன் வாங்க பேச்சு வார்த்தைகள் நடத்தி, 3 கோடி டாலர் வாங்குவதில் உடன்பாடு வந்ததும் நேயர்கள் அறிவார்கள். அதேமாதிரி இந்தியாவும் அமெரிக்க, பிரிட்டிஷ் கம்பெனிகளுடன் பல ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருப்பதும் இங்கு ஞாபகத்தில் வைக்கவேண்டும். காமன்வெல்த் நிதிமந்திரிகள் முடிவுகள் இரண்டு விஷயங்களை தெளிவுபடுத்துகிறது.

அதாவது ① ஆயுத பந்தயத்தில் இறங்கியுள்ள பிரிட்டன் தனது நெருக்கடிகளை பிரிட்டன் உள்பட சகல காமன்வெல்த் மக்கள் மீதும் திணிக்கிறது. ② அமெரிக்க ஏகாதிபத்திய பிடிப்பின் கீழ் தனது சாம்ராஜ்யத்தை பாதுகாத்துக் கொள்வது. ③ இந்தியா, பாக்கிஸ்தான் போன்ற நாடுகளின் ஆளும் வர்க்கங்கள் இதற்கு ஒப்புக் கொண்டுள்ளன. உலகம் பூராவும் உள்ள முற்போக்கு ஜனநாயக சக்திகளின் வளர்ந்து வரும் பலம், காலனி மக்களின் புரட்சிப் போராட்டங்களின் வெற்றிகளைக் கண்டு அஞ்சி நடுங்கும் பிரிட்டிஷ்-அமெரிக்க ஏகாதிபத்தியங்கள் இப்படிப்பட்ட பாதையைத் தான் கடைப்பிடிக்க முடியும்.